29th August 1961]

இருப்பதால், அவர்களும் மின்சாரத்தை விஸ்தரிக்க முடியாத நிலைமை ஏற்பட்டிருப்பதால், உடனடியாக அவைகளை அக்வயர் செய்வதற்கு ஏதாவது சர்க்கார் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI V. RAMAIAH : எப்போது அக்வயர் செய்யலாம், எந்த முறையில் அக்வயர் செய்யலாம் என்பதையெல்லாம் இப்போது பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

DEPUTY SPEAKER : The mike in the front bench is not working. I would request the hon. Member to speak aloud.

SRI V. K. KRISHNAMURTHY : வட்டார வளர்ச்சித் திட்டங்கள் செயல்பட்டுக்கொண்டு வரும் சில இடங்களிலேகூட இந்தத் தனியார் துறையினரின் ஆதிக்கம் இருக்கின்ற காரணத்தினாலே, விவசாய வேலைகளுக்குகூட அவ்வப்போது மின்சாரம் விஸ்தரிக்க முடியாத ஒரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே உடனடியாக அதற்கு மட்டுமாவது ஒரு தனிச் சட்டத்தைக் கொண்டுவர இந்த அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI V. RAMAIAH : இப்போது அரசாங்கத்தின் முன் இருக்கக்கூடிய பிரச்னையெல்லாம் எப்படித் தனியார் துறையினரிடமிருந்து அப்படிப்பட்ட பகுதிகளிலுள்ள விவசாயிகளுக்கு துரிதமாக மின்சாரம் கொடுப்பது என்பதுதான். அதற்கு என்னென்ன முயற்சிகள் எடுக்க வேண்டுமென்பது இப்போது பரிசீலனையில் இருந்து வருகிறது.

SRI M. KALYANASUNDARAM : ஸார், இந்த தனியார் துறையினரிடமிருந்து எடுத்துக்கொள்ளும் விஷயமானது சுமார் 7, 8 வருஷமாகவே பரிசீலனையில் இருந்து வருகிறது என்று கேட்கும் போதெல்லாம் சொல்லப்பட்டு வருகிறது. இந்த முயற்சியின் இறுதி முடிவு எப்போது எடுக்கப்படும்?

THE HON. SRI V. RAMAIAH : நீண்ட காலம் பரிசீலனையில் இருந்து, அடிக்கடி பரிசீலனை செய்யப்பட்டு, அவ்வப்போது சாத்தியமானவைகளை எல்லாம் எடுத்துக்கொள்ள நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. அதைப்போல் தொடர்ந்து செய்து, நமக்கு வசதிப்பட்டதையெல்லாம் கூடிய விரைவில் எடுத்துக் கொள்ளப்படும்.

*Homœopathic System of Medicine*

* 1475 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal to bring in legislation to recognise Homœopathic System of medicine?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir.

SRI S. M. ANNAMALAI : ஸார், முன்பு ஒருமுறை கேள்வி கேட்டபோதும், இதைப் பரிசீலனை செய்வதற்காக ஒரு கமிட்டி நியமித்திருக்கிறோம் என்று சொன்னார்கள். இப்போதும்

அதே பதில்தான் சொல்லப்படுகிறது. இந்தக் கமிட்டி 1959-லே ஒரு ரிப்போர்ட் சமர்ப்பித்தது, அதை கடந்த இரண்டு ஆண்டுகளாக பரிசீலனையில் இருந்து வருகிறது என்று சொல்லிக்கொண்டு வருகிறார்களே, அதிலே உண்டான சிக்கல்கள்தான் என்ன? அப்படி சிக்கல்கள் இருந்தால், ஏன் சீக்கிரம் அவைகளை நீக்குவதற்கு முயற்சி எடுக்கக் கூடாது?

THE HON. SRI M. A. MANICKAVELU : இரண்டு ஆண்டுகள் ஆகவில்லை. இந்தக் கமிட்டி 1959 டிசம்பரிலேதான் ரிப்போர்ட்டைச் சமர்ப்பித்தது. இன்னும் ஒரு வருஷம்கூட ஆகவில்லையே. (பலத்த சிரிப்பு).

SRI M. KALYANASUNDARAM : ஒண்ணேமுக்கால் வருஷம் ஆகிவிட்டதே.

*Mosquito Nuisance (Madras City)*

*1476 Q.—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether the Government have drawn the attention of the Corporation of Madras to the mosquito nuisance in Madras City; and

(b) if so, the reply received from them?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) The Corporation has replied that the nuisance is abating as a result of intensive measures taken by it.

SRI A. A. RASHEED : Sir, is the Hon. Minister aware that the mosquito nuisance in Madras City has increased even after the spraying of D.D.T?

THE HON. SRI M. A. MANICKAVELU : I am not prepared to accept the statement.

SRI M. KALYANASUNDARAM : கொசு இவ்வளவு தூரம்
9-00 a.m. பரவி இருப்பது சென்னை நகரம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிற அளவுக்கு சாக்கடை வசதி விஸ்தரிக்கப்படாதது காரணமா? அம்மாதிரி விஸ்தரிப்பதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU : The Government have drawn the attention of the Corporation of Madras to the mosquito nuisance in Madras city. The Corporation have replied that the nuisance was abating as a result of intensive measures taken by the Health Department. The following measures have been taken by the Corporation :—

(1) Six special groups consisting of 24 Thozhilalies have been appointed for the intensification of the anti-larval measures in the City.

(2) Deweeding and edging of the rivers and the canal. Oiling of the breeding places along the waterways.